<u>ஒரு பக்கத் தோழர்:</u> பகிரங்கமாகச் சொல்லுகின்றேன். நான் சொல்வது தவறு என்று எதிர்க் கட்சியார் நிரூபித்தால் திருத்திக் கொள்கிறேன். ஏழை மக்களை ஏமாற்றிப் பகிஷ்கரிப்பால் தள்ளாதீர்கள். உங்களுடைய பாணியால் நீங்கள் தாராளமாய் வேலை செய்யலாம். அதை மக்களிடம் தெரிவிக்கலாம். ஆனால் உங்களுடைய கொள்கைகளுக்காதரவாகச் சட்டசபையைக் கைப்பற்றுவதாகக் கதைகளை கட்டிவிட வேண்டாம். ஜாதியங்களை மிகைப்படுத்தி, அநேகர்களை வளர்த்து மக்களைப் பகிஷ்கரிப்பால் தள்ளாதீர்கள். சமூக ஒத்துழைப்பைப் பெறுவதற்கு அது கடைபிடிக்கும் வழி வலுக்கட்டாயமாக புகுத்தப்படும் சர்வாதிகாரத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். (ஒருவேளை தவறாயிருக்கலாம் என்றாலும்) நான் நன்கு தெரிந்துதான் பேசுகின்றேன். உங்களுடைய கொள்கை சரிதான் என்பது என் கருத்து. தனிமனிதனின் சுயநல லோகாயத உத்வேகத்தை எதிர்க்க சமூக ஒத்துழைப்பு அவசியம்; இந்த சமூக ஒத்துழைப்பை வலுக்கட்டாயமாக புகுத்தப்படும் சர்வாதிகாரத்தின் மேல்தான் பெறலாம், பெறவேண்டும் என்பது தான் கம்யூனிஸத்தின் அடிப்படை என்பது என் கருத்து. நாங்கள் ஜனநாயகத்தில் நம்பிக்கையுடையவர்கள். ஜனநாயகம் என்ற வார்த்தை இப்போது எல்லோருக்கும் சொந்தமான சொத்தாகிவிட்டது. இவ்வார்த்தை துர்ப்பிரயோகம் செய்யப்படுவதால் இக்கூட்டத்திற்கு பதில் வேறு வார்த்தையை கண்டுபிடிக்க வேண்டும். வாதத்திலும், பேச்சிலும், ஆலோசனையிலும், உடன்பாட்டிலும், பார்லிமெண்டரி முறையிலும், சமூக ஒத்துழைப்பைப் பெறலாம். இதற்கு பலாத்காரமே தேவையில்லை; எந்த இரகசியமான ஏற்பாடும் செய்ய வேண்டியதும் இல்லை. ஆனால் கம்யூனிஸ்ட்கள் இந்த வார்த்தையை உபயோகிக்க ஆரம்பித்தது முதல் ஏதுமற்றது என்பதற்கு பொருளைத் தவிர வேறு யாதொரு அர்த்தமும் கிடையாது. ஜனநாயக முறையில் சமுதாயத்தை மாற்றும் நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது. ஆனால் கம்யூனிஸ்ட்கள் சர்வாதிகாரத்தை நிலைநிறுத்தும் முறையில் நம்பிக்கை கொண்டவர்கள் — அதற்குள் பலாத்காரமில்லாமல் அவசியமானால் பலாத்காரத்தினாலும் சர்வாதிகாரத்தை ஏற்படுத்துவது என்பார்கள் அவர்கள். கம்யூனிஸ்ட்கள் இதை மறுத்துக் கூறட்டும். மறுத்தால் அதை நான் வரவேற்கிறேன். பலாத்காரம் தங்கள் கொள்கையல்ல என்பதை சொல்ல வேண்டும் என்றே நான் விரும்புகின்றேன். இதற்கு மாறாக அவர்கள் சொல்வதாக காணோம். ஆனால் தான் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை பலாத்கார முறை என்று நான் சொல்லுகிறேன். கம்யூனிஸ்டுகளின் அரசியல் திட்டத்திற்கே அதுதான் அடிப்படையானது என்பதாலேயே அதைப் பற்றி நான் விளக்குகின்றேன். கம்யூனிஸ்டுகளை எதிர்க்கவே நான் வந்திருக்கின்றேன். காரணங்களையும் நான் தெரிவித்து விட்டேன். பலாத்காரத்தை நான் விரும்பவில்லை. அவசியமானாலும் சரி அவசியம் இல்லாவிட்டாலும் சரி நான் விரும்பவில்லை. சாதனங்களையும், வீடுகளையும், படங்களையும், போட்டோக்களையும் ஒவ்வொரு முறையும் தீர்க்க இடம் போட்டால் சர்க்கார் தப்பாக ஒருவராவது சொல்லாமல் இருக்கமாட்டார்கள். கம்யூனிஸ்ட்கள் செய்ய முயற்சிப்பது இதுதான். ** <u>எஸ். சோமயாஜுலு:</u> விடுதலைக்காக போராடிய நேதாஜியை ஜப்பான் ஏஜண்ட் என்றும் காட்டிக்கொடுக்கள் என்று கூறியவர்கள். கம்யூனிஸ்ட் தேர்தலுக்கும் முத்துராமலிங்கத்தேவரின் கட்சி முறையானதா? * <u>ராஜாஜி:</u> சண்டை போடும் நோக்கில் உள்ள தமாஷுக்காகச் சண்டையிடும் குழந்தைகளைப் போல் நம் அரசியலில் இறங்கி இருக்கும். ரத்தம் வரும் வரையில் சண்டையாவெல்லதிதான். பாரு அடுத்து நடைபெற்றவிட்டன. மனிதனின் தோன்றியான வெங்கிணப்பிலித்து தான் வந்ததென்று தோன்றுகின்றன. சாதிபேதம் ஆபாசமான அம்சம் இதுதான் * சமுதாயம் முழுக்கும் உயர்ந்தபட்ச நலன் ஏற்படும் வகையில் சமுதாயத்தை இயங்கச் செய்வதுதான் அரசியல் * <u>ஆச்சாரி:</u> நிர்வாகயந்திரத்தை அமைக்க சமைக்க நமக்கிந்த ஆதிவசதிகள் சக்தியற்று இருக்கின்றன. போலீஸ் ஆட்சிக்கு ஏற்றவகையில் நிர்வாகமும் அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில் நிர்வாகத்தை ஒரு போதும் ஜன சர்க்கார் நடத்த முடியாது. * தொழிலாளர் வர்க்கத்தின் சர்வாதிகார ஆட்சி வேறு முறையில் ஏற்படுவதையே நான் விரும்புகின்றேன். அவர்கள் மட்டும் சர்வாதிகாரம் பெற்று மற்றவர்களை ஒழித்துக் கட்டும் வழியல்ல அது. ஒவ்வொருவரும் உழைக்க வேண்டும். அதுதான் நான் விரும்பும் சர்வாதிகாரம். ஒவ்வொருவரும் நன்றாகவும் வேலை செய்யவும் வைப்போமாக. அதைச் செய்தால் எல்லோரும் தொழிலாளர்களாக இருப்பர். பிறகு தொழிலாளர் வர்க்கத்தின் ஆட்சேபம் இருக்காது * <u>புகார் பற்றி ஜெ. பிரகாசம்:</u> பிரிட்டிஷ் அரசியல் சட்டப்படி தப்பா? அன்றி நம் நாட்டு அரசியல் சட்டத்தின்படி தப்பா? பிரிட்டிஷ் அரசியல் சட்டத்திற்கும் நமக்கும் சம்பந்தம் கிடையாது. நம் இந்திய அரசியல் சட்டத்திற்கும் நமக்குமே சம்பந்தமுண்டு. பிரிட்டிஷ் மன்னர் ஆட்சியின் கீழ் இருப்பதாக நினைக்கிறார். கவர்னர் ஜெனரலாக நியமித்த மன்னர் போனார். பதவியும் போயிற்று. அரசியல் சட்டத்தின் தெளிவான காரணத்தால் இந்நாட்டு மன்னர்கள் பிரஜைகளே. அவர்கள் நாட்டை ஆளும் முறையை வகுத்திருக்கின்றோம். மக்களின் நலனுக்கு பிரதிநிதியாக மந்திரிகள் இருக்க வேண்டும். மந்திரிகள் மக்களின் சேவகர்களே. மந்திரிகளின் நியமனத்திற்கு என்ன? கவர்னர் ஆலோசனை சொல்வாரா? தேர்தலுக்கு அர்த்தமென்ன ராஜ்யத்தை ஆண்டிடும்